உ

ஸ்ரீ குருப்யோ நம :

ஜய ஜய சங்கர ! ஹர ஹர சங்கர !!

# ஸ்ரீ முருகன் புஜங்கப் பாமாலை



ஸ்ரீ ஆதி சங்கர பகவத் பாத வேத ஸபா

திருவல்லிக்கேணி : : சென்னை-5.

1972] கந்தர் சஷ்டி அன்பளிப்பு. [ஞானயக்ஞம்

உ

ஸ்ரீ குருப்யோநம :

ஜய ஜய சங்கர !

ஹர ஹர சங்கர !!

# ஸ்ரீ முருகன் புஜங்கப் பாமாலை

(பதினாறு படங்களுடன்)




ஸ்ரீ ஆதி சங்கர பகவத் பாத வேத ஸபா

திருவல்லிக்கேணி : : சென்னை-5

1972] கந்தர் சஷ்டி அன்பளிப்பு [ஞானயக்ஞம்

ஆதிசங்கரர் அருளிய ஸ்ரீ சுப்ரஹ்மண்ய புஜங்கம்.



ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாத வேத ஸபா

திருவல்லிக்கேணி : : சென்னை-5

# ஸ்ரீ முருகன் புஜங்கப் பாமாலை

(தமிழாக்கியவர் கலாபாரதி)

## ஸ்ரீ சுப்ரஹ்மண்ய புஜங்கத்தைப்பற்றிச்சிறுவிளக்கம்.

ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதரின் அறிவாற்றலையும், யோகம், தவமகிமைகளையும் கண்டு பொறாமை கொண்ட அபிநவ குப்தர் என்ற புலவர், ஆசாரிய சுவாமிகளின் மீது ஏவல் செய்ததன் விளைவாக சுவாமிகள் காசநோயால் பீடிக்கப் பட்டார். வியாதியின் தொல்லை தாங்க முடியாமல் தவிக்கும் போது ஒருநாள் இரவில் சிவபெருமான் கனவில் தோன்றி, திருச்செந்தூர் சென்று தன் இளைய திருமகனும் செந்திற் குமாரனைத் தரிசித்து வணங்கி வழிபட்டால், வந்த வினைக-ளும், பிணிகளும் நீங்கும் என்றுரைத்துத் திருநீறு அருளி மறைந்தார். திருநீரைப் பூசிக்கொண்டு விழித்தெழுந்தார் சுவாமிகள். பிறகு தமது யோக மகிமையால் காலையில் திருச்-செந்தூர் அடைந்தார்.

அங்கு முருகனைத் தரிசிக்கும் போது ஆதிசேடன் பூஜை செய்து வருவதைக் கண்ணுற்ற ஆசாரியர், உடனே "பாம்பு" என்ற பொருள் படும் படி தலைப்பு அமைத்து "புஜங்கம்" என்னும் முப்பத்து மூன்று செய்யுள்கள் கொண்ட வடமொழிக் காவியத்தைப் படைத்து, முருகனுக்குப் பாமாலையாகச் சூட்டினார். திருச்செந்தூர் முருகனின் முன்னிலையில் ஆதி சங்கரர் வடமொழியில் இயற்றிய பாமாலைதான் சுப்ரஹ் மண்ய புஜங்கம். "புஜங்கம்" என்பது வடமொழியில் ஒருவித யாப்பைக் குறிக்கிறது. "புஜங்கம்" என்றால் "தோளால் நகர்ந்து செல்லக் கூடிய பாம்பு" என்றும் பொருளாகும். அதன் கவிச்சொற்களும், சந்தமும் பாம்பு வளைந்து செல்வது போல் அமைந்திருக்கும். தமிழன்பர்களும் தமிழிலும் புஜங் கத்தைப் பக்தியோடு தினசரி படித்துப் புரிந்து கொண்டு பாராயணம் செய்து, நற்பயன்களடைந்து மேன்மையுற வேண்டித் தமிழ்க் கவிதைகளாகத் தரப்பட்டிருக்கின்றன. முருகன் அருள் பெறுவோமாக.

## 1972 ஞானயக்ஞம்

### 5000 அன்பர்களுக்கு வழங்கப்படும் புஸ்தகங்கள்

1. ஸ்ரீவேங்கடேச ஸஹஸ்ரநாமம்.
2. ஸ்ரீவேங்கடேச அஷ்டோத்தரம், ஸுப்ரபாதம்.
3. ஸ்ரீவேங்கடேச கத்யம், கராவலம்ப ஸ்தோத்திரம், அஷ்டகம், ஸ்ரீனிவாஸ ஸ்தோத்திரம், 108 திருப்பதிகளின் அஷ்டோத்தரம்.
4. ஸ்ரீசௌந்தர்யலஹரீ. (தமிழ்ப்பாக்கள்).
5. ஸ்ரீவேங்கடேச மாலை, ஸ்ரீதராஷ்டகம்.
6. ஸ்ரீவேங்கடேச கவசம், அநுபூதி, பதிகம், ஸீதாராம கீதம்.
7. கோதாஸ்துதி (தாத்பர்ய ஸஹிதம்.)
8. கோபாலவிம்சதி (ப்ரதி பதார்த்த தாத்பர்யங்கள்.)
9. ஸ்ரீலக்ஷ்மீ ந்ருஸிம்ஹ ஸ்தோத்ரம். (கருத்துரையுடன்) ஸுப்ரபாதம், அடைக்கலப்பத்து, அஷ்டோத்தரம்.
10. ஸ்ரீரங்க மங்கள ஸுப்ரபாதம், ஸ்ரீரங்க கத்யம், ஸ்ரீசௌரிராஜ—ஸுப்ரபாதம்.
11. முகுந்தமாலை, ஸ்ரீபார்த்தஸாரதி ஸுப்ரபாதம், கேசவ பெருமாள் ஸுப்ரபாதம், ஸ்ரீஸ்துதி.
12. ஸ்ரீராமச்சந்த்ர தெய்வம், ஸ்ரீராமாவதார ப்ரபாவம், ஸ்ரீஸீதா ராமாஞ்சலி, ஸ்ரீராமத்துதி வெண்பா.
13. ஸ்ரீக்ருஷ்ணாஷ்டோத்தர சதநாமாவளி, பஞ்சாயுத ஸ்தோத்ரம், த்வாதச நாம பஞ்சரங்கள்.
14. ஸ்ரீஆஞ்சனேய அக்ஷர அலங்கார மாலாஸ்தோத்திரம்.
15. ஸ்ரீவேங்கடேச மஹிமா ஸ்தோத்ரம்.
16. நித்திய பாராயணமும் நித்திய பாராயணத்திரட்டும்.
17. ஆண்டாள் திருப்பாவை (கருத்துரையுடன்.)
18. ஸ்ரீவேங்கடேச திவ்ய சரித்ரம் ஸ்தோத்ரங்களுடன்.
19. ஸ்ரீதேவி மானஸ பூஜை (ஸ்தோத்திரங்களுடன்.)
20. வேங்கடேச அநுபூதி.

"மானேஜர்"

ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாத வேத சபா

8A, பழைய கட்டைத்தொட்டி தெரு,

திருவல்லிக்கேணி :: சென்னை-5.

என்ற விலாசத்திற்கு ரூ. 3/- அனுப்பி மேலே கண்ட 20 புஸ்தகங்களையும் பெற்றுக்கொள்ளலாம்.

அன்பு கொண்டு வழிபடுவார் முருகையா உந்தன்
அருணகிரி வழியடியார் முருகையா ஐயா
இன்பம் மிகுந்(து) அவர்கள் முருகையா செல்வம்
எந்நாளும் எய்த அருள் முருகையா ஐயா!



முருகா ! முருகா !! முருகா !!!

# முருகன் புஜங்கப் பாமாலை

காலமெலாம் பாலனவன் கணேசன் திருவுடையோன்
சூலமொடு ஐம்முகத்தோன் சுரனோடு நான் முகனும்
சீலமிகு திருமாலும் தேடிவரும் கரிமுகத்தோன்
மூலவினை மலைநீக்கி முழுச் செல்வமருள் புரிவான் (1)



கவியறியேன் வசனமோ கண்டறியேன் யென்
செவியறியா தொலியெதையும் செப்பியுமறியேன் பொருள்
புவிபுகழும் ஆறுமுகா ! உன் புனிதமுகம் நோக்குங்கால்
தெவிட்டாத தேன்தமிழ்ச் சொல் தெளிந்துவரும்
நெஞ்சிருந்து (2)



உலகமெலாம் காக்கும் கந்தா ! உளம் மகிழும் ஒளி உருவே !
நிலமுடை சான்றோர் நெஞ்சில் நாளெலாம் வாழும்தேவே !
பலர்போற்றும் சிவன் மைந்தா ! பக்திமிகு அந்தணர் தம்
குலதேவா! வேதத்தின் தத்துவமே! கோலமயில் வாகனனே!
பணிகின்றேன். (3)

செந்திற் கடலுடையோன் சேவடி துணையென்றே
வந்தவர் தம் பிறவியெனும் வரையில்லாக் கடலினையே
கந்தன் திருவருளால் கடந்திடுவர் பராசக்தி
மைந்தன் பதம் பணிவோம் மால்மருகன் சொன்னபடி (4)



" ஓங்கி உயர்ந்தடிக்கும் ஒய்யாரக் கடலலையும்
ஆங்கென் அடிபணிந்து அமர்ந்திடுமாம் விந்தைபோல
ஏங்கும் கவலையொடு என்முன்னே வந்திட்டால்
நீங்கும் தீங் " கென்பான் நெஞ்சிலுறைச் செந்தூரான். (5)

"எந்தன்மலை வந்தவர்கள் எந்தை மலை போனவர்கள்
கந்தமலை வந்தவர்கள் கைலைக்கு வந்தோ" ரென்பான்
சிந்தும் ஒளி மதி முகத்தோன் யெந்திலுறை ஆறுமுகம்
செந்தாமரை மலரொக்கும் சேவடிகள் தாம் வாழ்க (6)



எத்தனையோ பாவமெல்லாம் எளிதினிலே போக்கவல்ல
சித்தர் வாழ்கந்தமலை சீரலைவாய் ஓரத்தினில்
புத்தொளியாய்க் குகையினிலே புனிதகுகன் வீற்றுள்ளான்
புத்துயிராய் விளங்குமவன் பொன்னடிகள் போற்றிடு
வோம் (7)

மாணிக்கக் கட்டியென்ன மாசறு பொற் கோயிலென்ன
நாணக் கண்டிடலாம் நாற்கோடி ரவி ஒளியும்
வானத்துத் தேவதேவன் வரம் வேண்டத் தான் தருவான்
காணக்கண் குளிரும் கார்த்திகேயன் தாள் பணிவோம் (8)



செந்நிறப் பாதமலர் சிந்தும் தேனமுத மலர்
இன்னொலி பாதசரம் இன்பமயமாக்கும் மனம்
உன்னினைவில் நினைவாக உலவிவரும் வண்டெனவே
என்னிதயம் இருந்தங்கே எப்போதும் களித்திடுமே (9)

தங்கமய ஒளிவீசும் தகதகக்கும் பட்டாடை
அங்க அசைவினிலே அரைஞாணும் ஒட்டியாணம்
கிண்கிணிக்கும் சலங்கை ஒலி கிறங்கவைக்கும் இடுப்பழகும்
எங்கும் ஒளி வடிவாம் எழில் முருகன் நாம்பணிவோம் (10)



மங்கை குறவள்ளிதனை மால் மருகனணைத்ததுமே
கொங்கையழகிட்ட குங்குமமும் மாற்புறைந்தே
அங்கும் செவ்வொளி வீச அன்பர்தமையாட் கொள்வான்
தங்கநிற மார்புடையோன் தாரகனைக் கொன்றவனும் (11)

சூரபதுமனைக் கொன்றே சூரன் பகைதான் வென்றே
தூர யமனை ஒட்டி துண்டித்த யானை தந்தம்
பாருலகம் படைத்தவனைப் பணியவைத்த வேலவனைச்
சேரும் உயிர்காக்கச் செந்தூரான் கரம் துணையே (12)



பனிக்காலச் சந்திரனும் பருவமெலாம் நிறைந்தாலோ
தனித்தாறு முழுமதியின் தண்ணொளிபோல் ஆறுமுகம்
தனக்குள்ளே மாசுற்றும் தரணியிலே தோணும் மதி
கனிக்காக வலம் வந்த கந்தனுக்கு நிகராமோ ? (13)

அன்னப் பறவைகளோ ? ஆறுமுகா புன்சிரிப்பு
இன்னமுத இதழழகால் இன்சொற்கள் தாம்வருமே
வண்ணமலர்த் தாமரையில் வண்டுலவும் விழியழகை
என்ன சொல்ல? சிவபாலா! எழில் தாமரை முகனே! (14)



கண்விழிகள் பன்னிரண்டும் காதுவரை நீண்டிருக்கும்
நின் கருணைப் பெருவெள்ள நீர்த்துளிதான் கிட்டாதோ
அன்பரெனத் தொழுவோர்க்கு அருள் புரிந்தால் குறைந்
திடுமோ ?
உன் பார்வை படுமாயின் உய்வேனே உமைபாலா. (15)

முன்னின்ற பாலகனை முகர்ந்திட்டு மகிழ்ந்த சிவன்
''என்னின்றுதித்த மைந்தா என்றென்றும் வாழ்க'' வென
சொன்னதுமே ஆறுமுறை சுகவாழ்வை நிலையாக்கும்
மன்னுலகின் சுமைதாங்கும் மணிக்கிரீடசிரம் பணிவோம்.(16)



மாலை மணியணிகள் மார்பில் அசைந்தாட
கோலமிகு காதணியும் குண்டலமும் தோள்வளையும்
மேலிடைபட்டாடை மேன்மையொளி வீசிடுமே
வேலன், புரமெரித்தோன் வேதமைந்தா நீவருக (17)

"இங்குவா" வென்றதுமே இளையத் திருக்குமரன்
சங்கரிதன் மடியிருந்து சங்கரன் கரம் தழுவும்
தங்கநிற இளம்மேனி தவழும் குழந்தையவன்
திங்கள் முகமாறும் தினமும் பணிந்திடுவேன் (18)



குமரா! ஈசன் திருமகனே! குகனே! திருமயில்வாகனனே!
அமரர்பதியே! ஆறுமுகா ! அடியார்துயர்கள்நீக்குபவா !
சமரில்தாரகன் கொன்றவனே! சரவணபவனே வள்ளி
மணாளா !
உமையாள் உருவாம் வேல்முருகா ! உம்மைப்பணிந்
தோம் காத்திடுவாய். (19)

புலனடங்கி நினைவிழந்து பொறிகலங்கி கபமடைக்கப்
பலம்நலிந்து செயல்மறந்து பயம்மிகுந்து உடல் நடுங்க
நலம்நசிந்து உயிர்மறைந்து நமனைநாடும் போதினில்
உலகறிந்த துணைகள்வேறு உதவிடுமோ உனையல்லால்(20)



'வெட்டு, பிள, பொசு'க்கென்றுவெஞ்சினமாய் யமதூதர்
திட்டவரும் காலமதில் திருமயிலும் வேலுடனே,
கொட்டலைய விட்டிடாமல் கிட்டவந்து 'அஞ்சேல்' எனத்
தொட்டுக் காத்தருளத் தோன்றிடுவாய் வேலவனே(21)

உனைப்பணிந்து கேட்கின்றேன் "ஓம்முருகா" என்றுனையே
கணப்பொழுதும் சொல்லாமல் கைகளையும் குவிக்காமல்
நினைவிழந்து தவிப்பேனே நெஞ்சிலுயிர் நீங்குகையில்
துணைபுரிவாய் அப்போது துதித்திடுவேன் இப்போதே (22)



தாரகன், சிங்கமுகன், தம்பிகளின் தமையனவன்
சூரபத்மன் என்பவனும் சூழும் அண்டமாயிரத்தை
வீரமோடு ஆளுகையில் வீழ்த்தியதும் வேலதனல்
பாரமன நோய்நீக்கிப் பார்த்தருள்வாய் வேலவனே (23)

உமையால் திருமகனே ! உன்னடியேன் துக்கமெனும்
சுமையால் தளர்ந்தவன் நான் சுந்தரவடிவேல் கொண்டு,
இமையா அமரர்தேவா ! ஏழைக்கிரங்கும் வேலா !
உமையன்றி வேறறியேன், உளநோய் நீக்கிடுவாய் (24)

காசம் கயம் குட்டமொடு காக்கைவலி காச்சலெனும்
நாசம்செயும் பெருநோயும் நலியவைக்கும் பைசாசம்




வாசம்செய்ய என்னுடலில் வந்திட்டால் வேலா உன்
பூசுமிலைத் திருநீற்றால் போக்கிடுவாய் தீவினையாம் (25)

கந்தனைக் காணவே கண்கள், கரங்களும் அவன்பணிக்கே
செந்தில் முருகன்புகழ் செவிபடைத்த பயனாகும்
சந்ததமும் அவன்சரிதம் சந்தமொடு வாய்ப்பாடும்
சிந்தனையும் உடல்வாழ்வும் சீரலை வாய்க்கந்தனுக்கே (26)

பக்திநெறி மனிதர்க்கும் பரதத்துவ முனிவர்க்கும்
முக்தி யளித்திடுவர் மும்மூர்த்தி தெய்வங்களாம்
எத்தையு மறிந்திடாத எளியநிலைப் பஞ்சமரின்
சித்தமருள் முருகனன்றி சிறியேனெதையு மறியேனே (27)

மனைவியோடு மக்களும் மனையில் வாழும் பசுக்களும்
மனிதனோடு பெண்களும் மற்றுமுள்ள சுற்றமும்





நினைந்துமையே வணங்கவும், நித்தமும் துதிக்கவும்
வினைகள்நீங்க வேள்வியை விதிப்படியே நடத்தருள்வீர் (28)

நெடியமலைக்கிரௌஞ்சமதை நினைத்ததுமே வேல்கொண்டே
பொடிசெய்த வேலவனே ! புண்படுத்தும் நோய்களையும்
கொடியவிடப் பிராணியொடு கொத்தவரும் பறவையினம்
குடுகியோடச் செய்திடுவீர் கைகள் தாங்கும் வேலதனல் (29)

ஒன்மகன் செய்தபிழை தந்தைதாய் மன்னியாரோ ?
உன்மகன் நானன்றோ ? உலகத்தின் தந்தையேநீ
தென்பரம் கிரிதேவா ! தேவசேனு பதியே !
என்பிழை மலையெனினும் எளியேனைப் பொருத்தருள்
வாய் (30)

கந்தா ! உன்மயில்போற்றி ! கடம்பா வேல்போற்றி ! சிவன்
மைந்தா சேவல்போற்றி ! மறியாடும்தான்போற்றி !




சிந்தா குலந்தீர் செந்தூரா ! சிந்தும் சேவடியும் போற்றி !
வந்தே வரமருள்வாய் வணக்கம் வணக்கமையா (31)

வெற்றிதரும் இன்பவடி வேலவனே ! சிவன்மகனே !
வெற்றியின் திருஉருவே ! விளங்கும் புகழுடையோய் !
வெற்றி கொண்ட திருக்கடலே! வெள்ளப் பெருக்கினைபோல்
வெற்றிபுகழ் இன்பமெலாம் வேண்டுவோர்க்கருளிடுவீர் (32)

கந்தனின் புஜங்கமதைக் கவிபாடி பக்தியோடு
வந்தித்து வழிபட்டால் வாழ்ந்திடலாம் நெடுங்காலம்
சிந்தைக்குகந்த இல்லாள், செல்வம், நன்மக்களுடன்
தந்திடும் பேரின்பநிலை தரணிபுகழ் குகனருளே (33)

## பலஸ்ருதி

அறுபதினெட்டில், எதிலும் சிறப்பார்.
ஆறுமுகம் தொழுவோர் ஏற்றமும் கொள்வார்;
இன்பம் பெருகிட, ஐயங்கள் அகன்றிடும்.
ஈடேறும் எண்ணங்கள்; 'ஒருமை யென்றிரும்.




உச்சிப் பிள்ளையார்

உலகில் புகழ்ந்திட, 'ஓம்'காரம் விளங்கிட-நல்ல
ஊரில் சிறந்திட, ஔடதம் சரவணன்.
முருகா சரணம் முருகா சரணம்
முருகா சரணம் முருகா சரணம்

"ஓம் தத் ஸத்"

# DEVOTIONAL RECORDS
# (45 R. P. M.)

* Narayaneeyam (Kesathipatham & Rasakreedai) (SEDE 3619 & 3620) *first Dasakam (Narayaneeyam) (SEDE 3693) *Rasa Rasika (Rasakrida—2 Parts) (SEDE 369 ) *Sri Annapoornashtakam—2 Parts (7 EPE 1624) *Shyamala Dhandakam-2 Parts (SEDE 3613) *Purusha Sooktham, Chamakam SEDE 3640) *Rudhram—2 Parts (SEDE 3641) Mantra Pushpam, Navagraha Stothram (SEDE 3690) *Durga Stothram, Sree Sooktham & Gayatri Vedham (SEDE 3691) *Sri Guruvayurappan Suprabatham (7 EPE 1661) *Mahishasura Mardhini—2 Parts (SEDE 3633) *Adithya Hrudayam, Narayaneeyam (Kalinga Narthanam) (SEDE 3634) *Ananda Lahari, Sri Guruvatha Pureesa Pancharathna Stothram (SEDE 3653) *Mahalaks mi Stothram, Sri Vatha Puranathashtakam (SEDE 3697) *Sree Stuthi, Lakshmi Narasimha Karavalamba Stuthi (SEDE 3685) *Lalitha Sahasranamam—4 Parts (SEDE 3622 & 3623) *Lalitha Thrisathi—2 Parts (SEDE 3637)







## RADIO SERVICES

(KRISHNAN & KRISHNAN)

10, Mount Road, (Next to 'Shanthi') Madras-2 Phone : 86091

24, General Patters Road, (next to 'Wellington') Madras-2 Phone : 88089